

**புதிய வாழ்வும் எதிர்கொள்ளும் சவால்களும்**

வடக்கு முஸ்லிம் மக்களை மீளக்குடியமர்த்தும் நடவடிக்கைகள்

PAGE 4



**"மீள்குடியேறுபவர்களுக்கு உணவுப் பொதிகள்"**

உலக உணவுத் திட்ட அதிகாரி போலற் ஜோன்ஸ்

PAGE 5



**மும்முரமடைந்துள்ள வர்த்தக நடவடிக்கைகள்**

மன்னார் மாவட்ட மக்களின் கருத்துக்கள்....

PAGE 6



# மீண்டும் வாழ்வோம்

මීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8 | Vol 2 | No 51

இலவச பிரதி Free Copy

Lifeline | Humanitarian Information For IDPs

07.02.2010

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்


# மீள்குடியேற்றப் பிரதேசங்களின் நிவாரணப் பணிகளுக்கு USAID நிதியுதவி



வைப்பகப்படம்: **உதவிகளுக்காக காத்திருக்கும் வன்னி மக்கள்**

*எஸ்.பெல்லா டலிமா*

போர்ச் சூழலின்போது இடம்பெயர்ந்து வடபகுதியிலுள்ள முகாம்களில் தங்கவைக்கப்பட்டுள்ள மக்களின் மீள்குடியேற்றத்திற்கான உதவிகளை IOM நிறுவனத்தினூடாக வழங்க USAID நிறுவனம் முன்வந்துள்ளது.

இடம்பெயர்ந்த நிலையிலுள்ள 80,000 பேரின் மீள்குடியேற்றத்தின்போது அவர்களுக்குத் தேவையான போக்குவரத்து வசதிகளை ஏற்படுத்திக்கொடுக்கவும் தற்காலிகக் கூடாரங்களை அமைத்துக் கொடுக்கவும் குடிநீர், சுகாதார வசதிகளை வழங்கவும் 3 மில்லியன் அமெரிக்க டொலர்களை IOM நிறுவனத்திற்கு வழங்க USAID நிறுவனம் தீர்மானித்துள்ளதாக IOM நிறுவனத்தின் உத்தியோகப்பூர்வ இணையத்தளத்தில் செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

''மிகவும் வறுமைப்பட்ட குடும்பங்களும் பெண்களைக் குடும்பத் தலைவர்களாகக் கொண்ட குடும்பங்களும் வயது முதிர்ந்தோரும் அங்கவீனமுற்றோருமே எம்முடைய இலக்கு. இவர்களுக்குத் தேவையான குடிநீர், சுகாதார மற்றும் கூடார வசதிகளை மேம்படுத்தவே USAID நிறுவனம் இந்த நிதியுதவியினை வழங்கியுள்ளது. அத்துடன் மீள்குடியேறிய மக்கள் தமது வாழ்வாதாரத்தை மீள ஆரம்பிக்கத் தேவையான வசதிகளை ஏற்படுத்திக் கொடுக்கும் சேவையினையும் USAID நிறுவனம் மேற்கொண்டு

» 2 ஆம் பக்கம்

# வன்னி மாவட்டத்தில் துரிதமடைந்துள்ள மீள்குடியேற்றம்

*நிரஞ்சனி ரோலண்ட்*

கிளிநொச்சி மாவட்டத்தின் பூநகரி பிரதேசத்தில் ஆயிரம் பேர் தமது சொந்த இடங்களில் கடந்த செவ்வாய்க்கிழமை (2ஆம் திகதி) மீளக் குடியேற்றப்பட்டதாக மீள்குடியேற்றம் மற்றும் அனர்த்த நிவாரண சேவைகள் அமைச்சர் ரிஷாத் பதியுதீன் தெரிவித்தார்.



***"முல்லைத்தீவு மற்றும் கிளிநொச்சி மாவட்டங்களில் கண்ணிவெடிகள் அகற்றும் பணிகள் பூர்த்திசெய்யப்பட்ட பகுதிகளில் தொடர்ச்சியாக மக்களை மீளக் குடியேற்றுவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளப்பட்டு வருவகின்றது"***

இதேவேளை, முல்லைத்தீவு மற்றும் கிளிநொச்சி மாவட்டங்களில் கண்ணிவெடிகள் அகற்றும் பணிகள் பூர்த்திசெய்யப்பட்ட பகுதிகளில் தொடர்ச்சியாக மக்களை மீளக் குடியேற்றுவதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டு வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

ஜனாதிபதித் தேர்தலையடுத்து இந்த வாரம் ஆரம்பிக்கப்பட்ட மீளக் குடியேற்ற நடவடிக்கைகள் குறித்து எமது 'மீண்டும் வாழ்வோம்' இதழுக்குக் கருத்து தெரிவிக்கையிலேயே அவர் இவ்வாறு தெரிவித்தார்.

'ஜனவரி மாதம் 31ஆம் திகதி மீளக்குடியேற்ற நடவடிக்கைகளைப் பூர்த்தி செய்வதே எமது நோக்கமாக இருந்தது. அதற்கான முயற்சிகளையும் மேற்கொண்டோம். எனினும், கண்ணிவெடியகற்றும் நடவடிக்கைகளில் காலதாமதம் ஏற்பட்டதையடுத்து மீள்குடியேற்றப் பணிகளில் காலதாமதம் ஏற்பட்டுள்ளது. கண்ணிவெடியகற்றும் நடவடிக்கைகள் பூர்த்தி செய்யப்படும் பட்சத்தில் மீளக் குடியேற்ற நடவடிக்கைகள் துரிதமாக மேற்கொள்ளப்படும்' என்றும் அமைச்சர் தெரிவித்தார்.



**மீள்குடியேறும் மக்கள்**

நிவாரணக் கிராமங்களிலிருந்து தமது உறவினர் மற்றும் நண்பர்களின் வீடுகளுக்கு சென்றுள்ளவர்களையும் அவர்களின் சொந்த இடங்களில் மீளக் குடியேற்றுவதற்கான நடவடிக்கையெடுக்கப்படுவதாகவும் அவர்களின் விருப்பத்தின்

» 2 ஆம் பக்கம்



## ஹெய்டி

ஹெய்டியில் ஏற்பட்ட பூகம்பத்தினால் பலத்த காயங்களுக்குள்ளானவர்களை மேலதிக சிகிச்சைகளுக்காக அமெரிக்காவுக்கு அனுப்பும் நடவடிக்கைகள் இடைநிறுத்தப்பட்டிருப்பது குறித்து அங்குள்ள மருத்துவர்கள் கவலை வெளியிட்டுள்ளனர். இவர்களுக்கு எங்கு சிகிச்சையை மேற்கொள்வது, சிகிச்சைக்கான கட்டணத்தை யார் செலுத்துவது போன்ற சர்ச்சைகளையடுத்து இந்த நடவடிக்கை இடைநிறுத்தப்பட்டது. சிகிச்சைகளுக்காக அமெரிக்காவுக்கு அழைத்துவரப்பட்ட பலர் புளோரிடா மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர். இந்நிலையில், சிகிச்சைகளுக்கு செலவாகும் மருத்துவக் கட்டணத்தை மாநில அரசாங்கங்கள் பகிர்ந்துகொள்ள வேண்டுமென புளோரிடா ஆளுநர் சார்ளி கிறிஸ்ட் தெரிவித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.



## ஆப்கானிஸ்தான்

ஆப்கானிஸ்தானில் கடந்த ஒன்பது வருடங்களில் மாத்திரம் 12,069 பேர் நிலக்கண்ணி வெடி மற்றும் வெடிக்காத வெடிபொருட்களால் பாதிக்கப்பட்டுள்ளதாக 2009ஆம் ஆண்டுக்கான நிலக்கண்ணிவெடி கண்காணிப்பு அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. 1999ஆம் ஆண்டிலிருந்து 2008ஆம் ஆண்டு வரையான காலப்பகுதியில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் அடிப்படையிலேயே இந்த தகவல்கள் வெளியிடப்பட்டுள்ளன. இதேவேளை, கடந்த வருடம் ஆப்கானிஸ்தானில் 108 பேர் நிலக்கண்ணிவெடி மற்றும் வெடிக்காத வெடிபொருட்களால் உயிரிழந்துள்ளதுடன் 373 பேர் பாதிக்கப்பட்டுள்ளதாக ஆப்கானிஸ்தான் மைன் அக்ஷன் அமைப்பு தெரிவித்துள்ளது.



# பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்





ஐரோப்பா | ஆசியா
வட-அமெரிக்கா | தென்-அமெரிக்கா
அவுஸ்திரேலியா | ஆபிரிக்கா

## பொலிவியா

பொலிவியாவில் தொடர்ச்சியாக பெய்த கடும் மழை காரணமாக ஏற்பட்ட வெள்ளப்பெருக்கினால் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் இடம்பெயர்ந்துள்ளதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவிகளை வழங்குவதற்காக பெரு மற்றும் வெனிசுலாவிலிருந்து உணவுப் பொருட்களை ஏற்றிய கப்பலொன்று பொலிவியாவுக்குச் சென்றுள்ளது. இதேவேளை, ஆர்ஜென்டினாவும், அமெரிக்காவும் உதவிகளை வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது. கடந்த 25 ஆண்டுகளில் பொலிவியாவில் ஏற்பட்ட மிக மோசமான வெள்ளப்பெருக்கு இது என்பது குறிப்பிடத்தக்கது.



## யேமன்

யேமன் படையினருக்கும் ஹொயுதி தீவிரவாதிகளுக்கும் இடையில் இடம்பெற்றுவரும் மோதல் காரணமாக இடம்பெயர்ந்தவர்களின் எண்ணிக்கை 2 இலட்சத்து 50 ஆயிரமாக அதிகரித்துள்ளது. இந்நிலையில் இடம்பெயர்ந்தவர்களுக்கான மனிதாபிமான நடவடிக்கைகள் போதியளவில் முன்னெடுக்கப்படுவதில்லையென மனிதாபிமானப் பணியாளர்கள் தெரிவித்துள்ளனர். இதேவேளை, கூடாரங்கள் போதியளவின்மையால் அவற்றை அதிகரிப்பதே தமது முக்கியப் பணியாக இருப்பதாக ஐ.நா அகதிகளுக்கான உயர்ஸ்தானிகராலயத்தின் பேச்சாளர் அன்ட்ரெஜ் மயேசிக் தெரிவித்துள்ளார்.

## வன்னி....

(1ஆம் பக்கத் தொடர்ச்சி...)

பேரிலேயே அது மேற்கொள்ளப்படும் எனவும் அவர் சுட்டிக்காட்டினார். இதேவேளை, இடம்பெயர்ந்த மக்களுக்கு வழங்குவதெற்கென இந்திய அரசு 500 மெற்றிக் தொன் கூரைத் தகடுகளையும் வழங்கியுள்ளது. இதனால் மீள்குடியேற்றப்பணிகளை துரிதப்படுத்தக் கூடியதாக இருக்கும் எனவும் அவர் நம்பிக்கை வெளியிட்டுள்ளார்.

மீள்குடியேற்றப்படும் மக்களுக்கு ஐயாயிரம் ரூபாவை அமைச்சு வழங்குவதோடு, ஐ.நா அகதிகளுக்கான உயர்ஸ்தானிகராலயம் 25ஆயிரம் ரூபாவை வழங்குகின்றது. அதேபோல், இவர்களுக்கு 6 மாதங்களுக்குத் தேவையான உலர் உணவுப் பொருட்கள் வழங்கப்பட்டு வருவதோடு, விவசாயம், மீன்பிடித்தொழில் என்பவற்றை முன்னெடுக்க உதவிகளும் வழங்கப்பட்டு வருகின்றன. வடக்கில் மீள்குடியேற்றம் நடைபெறும் பிரதேசங்களில் உட்கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்தும் நடவடிக்கைகளும் துரிதமாக இடம்பெற்று வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

அவர் மேலும் தெரிவித்ததாவது, 'கிளிநொச்சி மற்றும் முல்லைத்தீவு மாவட்டங்களின் மீள்குடியேற்றப்படும் மக்களின் வீடுகள் சேதமடைந்துள்ளமை தொடர்பில் ஆய்வுகளை மேற்கொள்கின்றோம். அவை நிறைவடைந்ததும் அவர்களை அங்கு மீளக் குடியேற்றுவோம். இதேவேளை, இவர்களுக்கான போக்குவரத்து வசதிகள் ஏற்படுத்திக்கொடுக்கப்பட்டுள்ளன. எனினும், அவை போதியதாக இல்லை. போக்குவரத்து அமைச்சுடன் சேர்ந்து திருப்தியான போக்குவரத்துச் சேவைகளை வழங்குவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. புத்தளத்தில் இடம்பெயர்ந்துள்ள முஸ்லிம் மக்களை எதிர்வரும் மே மாதத்தில் மீளக் குடியேற்ற நடவடிக்கையெடுத்துள்ளோம். அவர்கள் வாழ்ந்த பகுதிகள் மோசமாக பாதிக்கப்பட்டுள்ளதுடன் அவற்றை புனரமைப்பதற்கான விசேட திட்டங்கள் முன்னெடுக்கப்பட்டு வருகின்றன. மீள்குடியேற்ற மற்றும் அனர்த்த நிவாரண சேவைகள் அமைச்சு மாகாணசபை மற்றும் ஏனைய அமைச்சுகளுடன் இணைந்து வரவு செலவுத் திட்டத்தினூடாக நிதி ஒதுக்கீட்டை மேற்கொண்டு இடம்பெயர்ந்த மற்றும் மீள்குடியேற்றப்படும் மக்களின் தேவைகளைப் பூர்த்திசெய்ய நடவடிக்கைகள் முன்னெடுக்கப்படும்'' என்றார்.

## மீள்....

(1ஆம் பக்கத் தொடர்ச்சி...)

வருகின்றது'' என இலங்கைக்கான அமெரிக்கத் தூதுவர் பற்றீசியா ஏ.பூட்டனிஸ் தெரிவித்துள்ளார்.

இந்நிலையில் IOM நிறுவனத்தின் இலங்கைக்கான தலைமை அதிகாரி முஹமட் அப்டி கர் தமது இணையத்தளத்தில், 'ஆயிரக்கணக்கான இடம்பெயர்ந்த குடும்பங்கள் மீள்குடியேறி வருகின்றனர். அவர்களுக்கு குடிநீர், சுகாதாரம் மற்றும் தற்காலிக இருப்பிட வசதிகள் குறைந்த அளவிலேயே கிடைக்கப்பெறுகின்றன. இந்த இடைவெளியை நிரப்பும்பொருட்டு வடக்கில் மீள்குடியேற்றப் பிரதேசங்களில் உள்ளவர்களின் மிகமுக்கிய தேவைகளாகக் கருதப்படுபவற்றை வழங்க எமது நிறுவனம் முன்வந்துள்ளது' என்று குறிப்பிட்டுள்ளார்.

யுத்தம் முடிவுக்குக் கொண்டுவரப்பட்ட பின்னர் இடம்பெயர்ந்து வவுனியா மெனிக்பாம் முகாமில் தங்கவைக்கப்பட்டுள்ள மக்களுக்கு இந்நிறுவனமானது அவசரகால கூடாரங்களை அமைத்துக்கொடுப்பதிலும் குடிநீர், சுகாதார வசதிகளை மேம்படுத்திக்கொடுப்பதிலும் அரசதரப்பினருக்கு உதவி வருகின்றது. இந்நிலையில் அரசின் வேண்டுகோளுக்கமையவே மீளத் திரும்பும் மக்களுக்குத் தேவையான அடிப்படை வசதிகளைப் பெற்றுக்கொடுக்கவுள்ளதாக அந்நிறுவனத்தின் இணையத்தளத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

# இடம்பெயர்ந்த மக்களுக்கு சுகாதார வசதிகள்

## வட மாகாண ஆளுநர் அலுவலகத்தினூடாக முன்னெடுக்கப்படும்

சுகாதார அமைச்சு அறிவிப்பு

*நிரஞ்சனி ரோலண்ட்*

வவுனியா மெனிக்பாம் நிவாரணக்கிராமங்களில் உள்ள இடம்பெயர்ந்த மக்களுக்கு சுகாதார வசதிகளை அளிக்கும் பொறுப்பு கடந்த முதலாம் திகதி முதல் வட மாகாண ஆளுநர் அலுவலகத்தினூடாக முன்னெடுக்கப்படும் என சுகாதார அமைச்சு தெரிவித்துள்ளது.

யுத்தத்தால் இடம்பெயர்ந்த மக்களுக்கான சுகாதார வசதிகள் தொடர்பில் இதுவரை காலமும் வட மாகாண சபைக்கு சுகாதார அமைச்சு உதவி வந்தது.

நிவாரணக்கிராமங்களில் இடம்பெயர்ந்திருந்த மக்கள் தற்போது துரிதமாக மீளக்குடியேற்றப்பட்டு வரும் நிலையில் இப் புதிய தீர்மானம் எடுக்கப்பட்டுள்ளதாக சுகாதார அமைச்சு தெரிவித்துள்ளது.

இது தொடர்பாக வட மாகாண ஆளுநர் மேஜர் ஜெனரல் சந்திரசிறி தெரிவிக்கையில், கடந்த ஆறு மாதங்களாக மெனிக்பாம் நிவாரணக் கிராமங்களில் சுகாதார சேவைகளை சுகாதார அமைச்சே வழங்கி வந்தது. அவர்களுக்கான காலம் பூர்த்தியடைந்த நிலையில் தற்போது இந்தப் பணிகள் எனது அலுவலகத்தின் கீழ் முன்னெடுக்கப்படுகின்றன''.




மருந்துப் பொருட்கள்

**நிவாரணக்கிராமங்களில் வாழ்ந்து வரும் மக்களின் ஆரோக்கியம் முன்னேற்றமடைந்து வருகின்ற அதேவேளை, அங்கு தொற்று நோய் பரவுவதற்கான அபாயமும் குறைவடைந்துள்ளது**

''தற்போது நிவாரணக் கிராமங்களில் 80 ஆயிரம் இடம்பெயர்ந்த மக்கள் மாத்திரமே வாழ்ந்து வருகின்றனர். ஆகவே, அவர்களின் தேவையின் நிமித்தம் சிறந்த சுகாதார வசதிகளை வழங்குவதற்காக மருத்துவர்களும் தாதிமாரும் தயார் நிலையில் உள்ளனர். இதேபோல், அவர்களுக்குத் தேவையான மருந்துகள் மற்றும் மருத்துவ உபகரணங்களும் விநியோகிக்கப்பட்டுள்ளன. இந்நிலையில், ஆரம்பத்தில் வழங்கப்பட்ட சுகாதார சேவைகளைத் தங்குதடையின்றி அவர்கள் பெற்றுக் கொள்ளக்கூடியதாக இருக்கும் என்றார்.

நிவாரணக்கிராமங்களில் வாழ்ந்து வரும் மக்களின் ஆரோக்கியம் முன்னேற்றமடைந்து வருகின்ற அதேவேளை, அங்கு தொற்று நோய் பரவுவதற்கான அபாயமும் குறைவடைந்துள்ளது. ஆகவே, முகாம்களிலுள்ள இடம்பெயர்ந்தவர்களின் எண்ணிக்கைக்கேற்ப மருத்துவர்களின் எண்ணிக்கையை 45ஆகக் குறைத்து மருத்துவ பிரிவுகளின் எண்ணிக்கையையும் குறைத்து மீளக் குடியேற்றப்படும் மக்களுக்கு சுகாதார சேவைகளை வழங்குவதற்காக சுகாதார அமைச்சினால் இந்தத் தீர்மானம் எடுக்கப்பட்டதாக சுகாதார அமைச்சின் கீழ் செயற்படும் அனர்த்த முன்னாயத்த மற்றும் பொறுப்புக்கான பிரிவின் பணிப்பாளர் வைத்தியர் ஈஸ்வரகோட்டேகொட தெரிவித்தார்.

இது தொடர்பாக அவர் மேலும் தெரிவித்ததாவது:

''நிர்வாக நடவடிக்கைகள் மாத்திரமே வட மாகாண ஆளுநர் அலுவலகத்தின் கீழ் மேற்கொள்ளப்படுகின்றன. ஆனால், சுகாதார சேவைகள் வழமைபோலவே வழங்கப்படும். மீளக்குடியேற்றப்படும் பகுதிகளிலுள்ள மருத்துவமனைகளை புனரமைப்பு செய்து சுகாதார வசதிகளை வழங்கி வருகின்றோம். ஆனால், அந்தப் பகுதிகளில் மருத்துவர்களுக்கான பற்றாக்குறை நிலவுவதால் நிவாரணக் கிராமங்களில் மேலதிகமாக உள்ள மருத்துவர்களை இந்த பகுதிக்கு அனுப்ப நடவடிக்கையெடுத்துள்ளோம். இதேபோல், கிளிநொச்சி மருத்துவமனையில் மகப்பேற்றுப் பிரிவு, சத்திரசிகிச்சைப் பிரிவு, புதிய வார்ட்டுகள் போன்றவற்றை ஏற்படுத்திக்கொடுத்துள்ளோம். வைத்தியர்களுக்கான விடுதிகளையும் புனரமைத்துள்ளோம். அதேபோல், நிவாரணக்கிராமங்களிலுள்ள மருத்துவப் பிரிவுகள் மூடப்படும்போது அங்கிருந்த மருத்துவ உபகரணங்களை மீளக்குடியேற்றப்படும் பகுதிகளுக்கு அனுப்பியுள்ளோம். முச்சக்கர வண்டி அம்புலன்ஸ்களை அங்கு அனுப்பியுள்ளோம். மீளக்குடியேற்றப்படும் மக்களுக்கு இவ்வாறான உதவிகளை வழங்கி வருகின்றோம்'' என்றார்.

> "கடந்த ஆறு மாதங்களாக மெனிக்பாம் நிவாரணக் கிராமங்களில் சுகாதார சேவைகளை சுகாதார அமைச்சே வழங்கி வந்தது. அவர்களுக்கான காலம் பூர்த்தியடைந்த நிலையில் தற்போது இந்தப் பணிகள் எனது அலுவலகத்தின் கீழ் முன்னெடுக்கப்படுகின்றன."



''முகாமில் இருந்தபோது நான் கர்ப்பிணியாக இருந்தேன். அங்கிருந்த மருத்துவர்களும் தாதியரும் எனக்கு சிறந்த சுகாதார வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தார்கள். எனினும் போதியளவு நிவாரணப்பொருட்கள் கிடைக்கவில்லை'' என தவசிக்குளம் பகுதியில் மீளக் குடியேற்றப்பட்டுள்ள குலேந்திரன் சசிகலா தெரிவித்தார்.

சுகாதார அமைச்சுடன் இணைந்து பல்வேறு அரசசார்பற்ற மற்றும் தனியார் துறையினரும் நிவாரணக்கிராமங்களில் தங்கியிருந்த இடம்பெயர்ந்த மக்களுக்கு சுகாதார சேவைகளை வழங்கி வந்தனர். இந்நிலையில், போதுமானளவு சுகாதார வசதிகள் சுகாதார அமைச்சினால் முன்னெடுக்கப்படுவதனால் தமது சுகாதார செயற்பாடுகளை இடைநிறுத்துமாறு சுகாதார அமைச்சு அறிவித்ததாக மெனிக்பாம் முகாமில் அரசசார்பற்ற நிறுவனத்தினால் இயங்கிவந்த எம்.எஸ்.எம். மருத்துவமனையின் சுகாதார அதிகாரி சற்குண நந்தன் அஜந்தன் தெரிவித்தார்.

# இடம்பெயர்ந்த ஆசிரியர்கள் சொந்த இடங்களில் பணியாற்றுவர்

*ஜெகதீஸ்வரி இராமசாமி*



வன்னியிலிருந்து தற்காலிக இணைப்பில் வெளிமாவட்டங்களில் கடமையாற்றும் ஆசிரியர்கள் தமது சொந்த இடங்களுக்குச் சென்று பணியாற்றும்படி வேண்டுகோள் விடுக்கப்பட்டுள்ளது.

வன்னி மாவட்டத்தில் தற்போது 85 பாடசாலைகள் மீள ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இதற்கென ஏறத்தாழ 1600ற்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் இணைக்கப்பட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

வன்னியிலிருந்து தற்காலிக இணைப்பில் வெளிமாவட்டங்களில் கடமையாற்றும் ஆசிரியர்களின் தற்காலிக இணைப்புக்கள் இம்மாதம் 2ஆம் திகதி முதல் ரத்து செய்யப்பட்டுள்ளன. இவர்கள் மீண்டும் தமது சொந்த இடங்களுக்குச் சென்று தமது நிரந்தர கல்வி வலயத்தில் பணியாற்றும்படி வடமாகாண கல்வி அமைச்சினால் அறிவுறுத்தல் விடுக்கப்பட்டுள்ளது.

இதேவேளை, தாம் பாடசாலைகளுக்குச் செல்வதாயின் போக்குவரத்து உட்பட பல்வேறு பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்க வேண்டியுள்ளதாகவும் தமக்கு தங்குமிடவசதி மற்றும் விசேட கொடுப்பனவுகள் வழங்கப்பட வேண்டுமெனவும் கிளிநொச்சி மாவட்டத்தில் பணிபுரியும் ஆசிரியர் சுதாகரன் தெரிவித்தார்.

அதுமாத்திரமன்றி தற்போது மீள்குடியேற்றங்கள் நடைபெற்றுவரும் வன்னிப் பிரதேசத்தில் ஆசிரியர்களை கடமைக்காக அனுப்புவதனால் அவர்கள் பல்வேறு சிரமங்களை எதிர்நோக்க வேண்டியேற்படுமாதலால் அதற்கென மேலதிகக் கொடுப்பனவு வழங்கப்பட வேண்டுமென இலங்கை ஆசிரியர் சங்கத்தினால் கோரிக்கையொன்று முன்வைக்கப்பட்டுள்ளது.

இது தொடர்பில் கருத்துத் தெரிவித்த இலங்கை ஆசிரியர் சங்க செயலாளர் ஜோசப் ஸ்டாலின், 'பாடசாலைகள் மீளத் திறக்கப்பட வேண்டுமென்பதே எம் அனைவரினதும் எதிர்பார்ப்பாகும். இருப்பினும், சகல வசதிகளுடனும் ஆசிரியர்களையும் மாணவர்களையும் அங்குள்ள பாடசாலைகளுக்கு அனுப்ப வேண்டும் என்பதே எம் கோரிக்கை. ஏனைய பிரதேசங்களை விட கஷ்ட பிரதேசத்திற்கு இவர்கள் செல்கின்றனர். அதனால் தான் நாம் இவர்களுக்கான விசேட கொடுப்பனவு ஒன்றை வழங்கும்படிக் கோரியிருக்கின்றோம்' என தெரிவித்தார்.

அத்துடன் இந்த பாடசாலைகளை மீள அமைப்பதில் அதிபர் ஆசிரியர்களின் பங்கு முக்கியமானது என்றும் இவர்களுக்கான போக்குவரத்திற்காக விசேட வசதிகள் வழங்கப்படும் எனவும் பருவகால பயணச்சீட்டுக்களைப் பெற்றுக் கொள்வதன் மூலம் இவர்கள் இலகுவாக போக்குவரத்தினை மேற்கொள்ளலாம் எனவும் வடமாகாண கல்விஅமைச்சின் பதில் செயலாளர் பொன்னம்பலம் குறிப்பிட்டார்.

இது தொடர்பில் அவர் மேலும் கூறுகையில், 'மீள்குடியேற்ற நடவடிக்கைகள் தொடர்ந்தும் நடைபெற்று வருகின்ற நிலையில் இந்தப் பாடசாலைகளை மீளத் திறப்பது அவசியமாகும். மீள இயங்கும் பாடசாலைகள் மற்றும் முகாம்களில் இயங்கும் பாடசாலைகள் போன்றவற்றில் இந்த ஆசிரியர்களின் சேவை மிக அவசியம். எனவேதான் நாம் இவர்களுக்கான இணைப்புக்களை ரத்து செய்தோம்' எனத் தெரிவித்தார்.

**மீள்குடியேற்றப்பட்ட மக்கள்**

# புதிய வாழ்வும் எதிர்கொள்ளும் சவால்களும்


மன்னார் நெடுங்கேணி பிரதேசத்தில் தேனீர்க்கடையில் வியாபாரம் செய்துவரும் நூர்முகமது

படங்கள்: ஏ. சொர்ணலிங்கம்

*எஸ்.என்.மணிவாணன்*

'வந்து பாருங்க எங்கட வெள்ளாமைய, இன்னும் இரண்டு மாசத்தில இந்த அழகைப் பார்க்க நீங்க கட்டாயம் வரணும்' என்று ஆனந்தக்களிப்புடன் எம்மை வரவேற்ற நூர்முகமதின் மகிழ்ச்சிக்குக் காரணமாக இருந்தது அவரது மீள்குடியேற்றம்தான்.

20 வருடம் தனது சொந்த ஊரைவிட்டுப் பிரிந்திருந்து மீண்டும் தனது ஊருக்கு வந்த மகிழ்ச்சியின் உச்சத்தில் இருந்தார் அவர். 1990களில் வடக்கிலிருந்து பலவந்தமாக வெளியேற்றப்பட்ட முஸ்லிம் மக்களை மீளக் குடியமர்த்தும் நடவடிக்கைகள் மெதுவாக இடம்பெற்று வருகின்றன.

புத்தளம் மாவட்டத்தில் மாத்திரம் கிட்டத்தட்ட இடம்பெயர்ந்த 20,000 முஸ்லிம் குடும்பத்தினர் வசித்து வருகின்றனர். இம்மக்களின் இடம்பெயர்வு இவர்களுக்கு நீண்டகாலப் பாதிப்பை ஏற்படுத்திவிட்டது. அதுமட்டுமன்றி புத்தளம் மாவட்டத்தில் உள்ள பலரும் இவர்களை இளக்காரமாகப்பார்க்கும் நிலை தொடர்வதாகத் தெரிவிக்கின்றனர் இவ் இடம்பெயர்ந்த மக்கள். புத்தளம் மாவட்டத்தின் வளங்களைப் பகிர்ந்துகொள்வது தொடர்பிலும் தொடர்ச்சியான சிக்கல்கள் நிலவுகின்றன. மீள்குடியேற்றம் மட்டுமே இதற்கான நிரந்தரத் தீர்வாக இருக்க முடியும் என்பது பலரது கருத்தாகும். எனினும், மீள்குடியேறும்போது தமது வாழ்வை மீளக்கட்டியெழுப்புவதில் எப்படியான பிரச்சினைகளை எதிர்நோக்க வேண்டிவருமோ என்ற அச்ச உணர்வும் மக்களுக்கு இருக்கத்தான் செய்கிறது.

> “ தனது சொந்த மண்ணில் குடியிருப்பதுபோல் மகிழ்ச்சி எதுவும் தனக்கு இல்லை என்றார் ”

மன்னார் நெடுங்கேணி பிரதேசத்தில் மீள்குடியேறியுள்ள நூர்முகமது சிறிய தேனீர்க்கடையில் வியாபாரம் செய்து பிழைப்பு நடத்துகிறார். மீள்குடியேற்றத்தின் பின்னர், தனது சொந்த மண்ணில் குடியிருப்பதுபோல் மகிழ்ச்சி எதுவும் தனக்கு இல்லை என்றார் அவர்.

குடியிருப்பு மற்றும் குடிநீர் போன்ற அடிப்படைத் தேவைகள் இன்னும் பூர்த்தி செய்யப்பட வேண்டிய நிலை காணப்படும் போதும் தமது நிலம் மற்றும் விவசாயக் காணிகள் தமக்கு மீளக்கிடைத்துள்ளமை இம்மக்களின் மகிழ்ச்சிக்குக் காரணமாக அமைகின்றது.

> “ மீள்குடியேற்றம் மட்டுமே இதற்கான நிரந்தரத் தீர்வாக இருக்க முடியும் என்பது பலரது கருத்தாகும் ”

ஆனால், மறுபக்கம் மீளக்குடியேறியுள்ள மக்கள் இன்னும் பூரண நம்பிக்கையுடன் இருப்பதாகத் தெரியவில்லை. கடந்த கால அனுபவங்களும் அரசியல் சூழ்நிலைகளும் மீள்குடியேற்றம் பற்றிய முழு நம்பிக்கையைத் தோற்றுவிக்கவில்லைபோல் தெரிகிறது.

எஸ்.பி.பொற்கோணி மீளக்குடியேறியுள்ள காசிம், தனது நிலம் தனக்குக் கிடைத்துள்ள போதும் புத்தளத்திலேயே இன்னும் வசித்து வருகின்றார். புத்தளத்தில் இருந்து நெடுங்கேணிக்கு அடிக்கடி வந்து செல்கின்றார். தனது பிள்ளைகளைப் பாடசாலைக்கு அனுப்புவதிலும் பாதுகாப்புக் கருதியும் தான் அங்கேயே இருப்பதாக அவர் கூறினார்.

போக்குவரத்து தொடர்பிலும் இம்மக்களுக்குப் பிரச்சினைகள் காணப்படுகின்றன. மறுபுறம் இம்மக்கள் தமது வாழ்வை வழமைக்குக் கொண்டுவர போராட்டம் நடத்திக் கொண்டிருக்க காட்டு யானைகளோ இவர்களுக்கு சவால் விடுத்துக்கொண்டிருக்கின்றன. பல சிரமங்களுக்கு மத்தியில் இவர்கள் மேற்கொள்ளும் விவசாயம் காட்டு யானைகளால் அழிக்கப்பட்டு வருகின்றது.

மீள்குடியேறியுள்ள ஜாமிலா உம்மா தமது விவசாயம் இதனால் பாதிப்படைவதாகத் தெரிவிக்கையில், ''இங்கு நாங்கள் சந்தோசமாகத்தான் இருக்கின்றோம். ஆனால், யானைத்தொல்லைதான் அதிகமாக இருக்கிறது'' என்றார்.


ஜாமிலா உம்மா

மீண்டும் பக்கத்துக் கிராமங்களில் உள்ள தமது சகோதரத் தமிழ் மக்கள் இவர்களைப் பார்க்க வருகின்றார்கள். மாற்றங்கள் வரும் என்ற நம்பிக்கையும் இவர்கள் மத்தியில் இல்லாமல் இல்லை.

மக்கள் மீளக்குடியேறியுள்ள நெடுங்கேணி பிரதேசத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை நெற்கதிர்கள் தான் தெரிகிறது! இது பசுமையான எதிர்காலத்துக்கான சமிக்ஞை போலும் தோன்றுகிறது!

## 'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சி

**'மீண்டும் வாழ்வோம்'' வானொலி நிகழ்ச்சி நவம்பர் மாதம் தொடக்கம் புதிய பல அம்சங்களுடன் இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்தின் தேசிய சேவையில் திங்கள் முதல் வெள்ளிவரை இரவு 9.30 முதல்10.00மணி வரையும் கிழக்கு மாகாணத்தில் பிறை எப்.எம்.வானொலியில் ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகல் 1.30 மணி முதல் 2.00 மணிவரையும் ஒலிபரப்பாகவுள்ளது. எமது நிகழ்ச்சி ஒலிப்பதிவுகளையும் இப்பத்திரிகையையும் http://lifeline.internews.lk/ என்ற இணையத்தளத்தில் தரவிறக்கம் செய்யலாம்.**



எமது நிகழ்ச்சிகள் குறித்த உங்களது கருத்துக்களை எழுதியனுப்புங்கள்.

## 'சிறுவர் உதவி இணைப்பு' செயற்றிட்டம்

வவுனியா மாவட்ட செயலகத்தின் குடும்ப உறவுகளைத் தேடும் பிரிவின் (Family Tracing Unit) ஒரு பகுதியாக 'சிறுவர் உதவி இணைப்பு' (Helpline for Children) மாவட்டத்தின் அரசாங்க அதிபர் திருமதி.பி.எஸ்.எம்.சார்ள்ஸ் இனால் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

குடும்பங்களிலிருந்து பிரிந்த சிறுவர்களை மீள இணைத்தல், சிறுவர் துஷ்பிரயோகத் தடுப்பு முதலான விடயங்கள் இப்பிரிவினால் கையாளப்படும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

நன்னடத்தைச் சிறுவர் பராமரிப்புத் திணைக்களத்தோடு இணைந்து வவுனியா மாவட்ட செயலகம் முன்னெடுக்கும் இச் செயற்றிட்டத்துக்கு யுனிசெப் உதவி வழங்குகின்றது.

**024 222 55 66**



தற்போதைக்கு வார நாட்களில் காலை 8.30 இலிருந்து மாலை 5.30 மணிவரை இந்தத் தொடர்பிலக்கம் சேவையிலிருக்கும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

# மீள்குடியேறுபவர்களுக்கு ஆறு மாத காலத்துக்கு உணவுப்பொதிகள் வழங்கப்படுகின்றன - உலக உணவுத் திட்ட அதிகாரி



» இடம்பெயர்ந்த மற்றும் மீள்குடியேற்றப்பட்ட மக்களுக்கு உலக உணவுத் திட்டத்தினால் முன்னெடுக்கப்படும் உணவு விநியோக நடவடிக்கைகள் குறித்து அந் நிறுவனத்தின் நன்கொடை ஒருங்கிணைப்பு அதிகாரி **போலற் ஜோன்ஸ்** அவர்களை நேர்கண்டோம்.




**இடம்பெயர்ந்த மக்களுக்கு உலக உணவுத் திட்டம் முன்னெடுத்து வரும் நடவடிக்கைகள் குறித்தும் உணவு விநியோகம் தொடர்பிலும் தெரிவிக்க இயலுமா?**

உலக உணவுத் திட்டமானது தொடர்புபட்ட பங்குதாரர் நிறுவனங்களுடன் இணைந்து இடம்பெயர்ந்த மக்களுக்கு உணவு வழங்கும் நடவடிக்கைகளை முன்னெடுத்து வருகின்றது. முகாம்களிலுள்ள மக்களுக்கு மட்டுமல்லாது உறவினர் வீடுகளில் தங்கியுள்ளவர்களுக்கும் மரக்கறி எண்ணெய் மற்றும் தானியங்கள் அடங்கிய உணவுப் பொதிகளை வழங்குகின்றோம். மேலும் மீள்குடியேற்றத் திட்டத்தின் கீழ் தமது சொந்த இடங்களுக்கு மீளத் திரும்புபவர்களுக்கும் ஆறு மாதங்களுக்கான உணவுப் பொதிகளை வழங்குகின்றோம். உலக உணவுத் திட்டமானது அரசு மற்றும் தொடர்புபட்ட பங்குதாரர்களுடன் இணைந்து போதிய போசாக்கு உணவு இடம்பெயர்ந்த மக்களை சென்றடைவதை உறுதிப்படுத்தும் பணியில் ஈடுபட்டு வருகின்றது.

> ***மக்கள் ஒரு பெரிய குழுவாக மீள்குடியேற்றப்படுவதன் காரணமாக இந்த ஆறு மாத காலப்பகுதி என்பதை கணக்கிடுவது எமக்கு சுலபமாக இருக்கின்றது***

**இடம்பெயர்ந்தவர்களின் போசாக்கு உணவுத் தேவையினை எவ்வாறு நிவர்த்தி செய்கின்றீர்கள்?**

அடிப்படை போசாக்குத் தேவையினை நிவர்த்தி செய்யப் போதுமான அளவென சர்வதேச நாடுகள் ஏற்றுக்கொண்ட அளவில் 2100 கிலோ கலோரி பெறுமதி மிக்க உணவுப்பொருட்கள் அடங்கிய பொதிகளை நாங்கள் இடம்பெயர்ந்த மக்களுக்கு வழங்குகின்றோம். எமது உலக உணவுத் திட்டத்தில் போசாக்கு உணவுப் பிரிவினையும் கொண்டுள்ளோம். அத்துடன் மருத்துவர்கள் மற்றும் போசாக்கு நிபுணர்களும் எம்முடன் இணைந்து பணியாற்றுகின்றார்கள். சர்வதேசத் தரத்திலான போசாக்கு உணவுப் பொருட்களையே கடந்த காலங்களில் இடம்பெயர்வுகளால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நாங்கள் வழங்குகின்றோம். அத்துடன் தொடர்புடைய அதிகாரிகளுடன் இணைந்து இடம்பெயர்ந்தவர்களுக்கு உரிய நேரத்தில் உணவுப் பொருட்கள் கிடைப்பதை உறுதிப்படுத்துகின்றோம்.

**மீள்குடியேற்றப்பட்டவர்கள் எவ்வாறான உதவிகளைப் பெற்றுக்கொள்கின்றார்கள்?**

முன்னெடுக்கப்பட்டு வருகின்ற உதவித் திட்டங்களின் ஊடாக பலதரப்பட்டவற்றை இடம்பெயர்ந்த மக்களுக்கு உலக உணவுத் திட்டம் வழங்கி வருகின்றது. மீளக்குடியேறுபவர்கள் தமது வாழ்வாதாரங்களை மீள ஆரம்பித்துக்கொள்வதற்கு ஏதுவாக அவர்களுக்கு ஆறு மாதங்களுக்குத் தேவையான பொருட்கள் அடங்கிய பொதிகளை வழங்குகின்றோம். அநேகமானவர்கள் விவசாயம் செய்யும் வாய்ப்பை இழந்துள்ளார்கள் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். இதற்கான பொருளாதார வாய்ப்புகள் ஏற்படுத்திக்கொடுக்கப்பட வேண்டியுள்ளது. மேலும் புனர்வாழ்வுப் பாடசாலைகள், வகுப்பறைகள் போன்றவற்றில் உள்ள இளம்பராயத்தினருக்கு உணவு வழங்கக்கூடிய இடங்களில் வழங்கி வருகின்றோம். அதுமட்டுமல்லாமல் தாய்சேய் போசாக்குத் திட்டத்தின் கீழ் ஒரு பெரிய தொகையினரை உள்ளடக்கியிருக்கின்றோம். இத்திட்டத்தின் மூலமாக போசாக்கான கனியுப்புக்கள் நிறைந்த உணவுப்பொருட்கள் இனங்காணப்பட்ட ஐந்து வயதுக்கும் குறைந்த சிறுவர்கள், கர்ப்பிணிகள் மற்றும் பாலூட்டும் தாய்மார்களுக்கு வழங்கப்பட்டு வருகின்றது.

> ***போசாக்கான கனியுப்புக்கள் நிறைந்த உணவுப்பொருட்கள் இனங்காணப்பட்ட ஐந்து வயதுக்கும் குறைந்த சிறுவர்கள், கர்ப்பிணிகள் மற்றும் பாலூட்டும் தாய்மார்களுக்கு வழங்கப்பட்டு வருகின்றது***

**ஆறு மாத காலப்பகுதி என்பதை எவ்வாறு கணக்கிடுகின்றீர்கள்?**

இடம்பெயர்ந்த குடும்பங்கள் தமது சொந்த இடத்திற்கு மீளத் திரும்புகின்ற நாளிலிருந்துதான் ஆறு மாத காலப்பகுதியைக் கணக்கிடுகின்றோம். மீள்குடியேற்றம் கடந்த சில மாதங்களாக விரிவுபடுத்தப்பட்டுள்ளமை நீங்கள் அறிந்ததே. ஆனால், இந்நடவடிக்கையானது வித்தியாசமான காலப்பகுதியில் மாறுபட்ட வேகத்தில் முன்னெடுக்கப்படுகின்றது. யாழ்ப்பாணத்தில் 60,000 பேர் மீள்குடியேற்றப்பட்டுள்ளனர். ஆனால், வன்னிப் பகுதியில் சில காரணங்களினால் மிகக் குறைந்த அளவிலானோர்களே மீள்குடியேற்றப்பட்டுள்ளனர். அதிகளவிலான பணிகள் முடிவுற்றிருந்தாலும் குறிப்பிடத்தக்க ஒரு சில பணிகள் அங்கு முடிக்கப்பட வேண்டியுள்ளது. மக்கள் ஒரு பெரிய குழுவாக மீள்குடியேற்றப்படுவதன் காரணமாக இந்த ஆறு மாத காலப்பகுதி என்பதை கணக்கிடுவது எமக்கு சுலபமாக இருக்கின்றது.

**உணவு நிவாரணப் பொருட்கள் தமக்கு அதிகமாகக் கிடைப்பதனால் இடம்பெயர்ந்த மக்கள் அவற்றை விற்பனை செய்வதாக அறிகின்றோம். இந்த நிலமையை எவ்வாறு கருத்திற்கொள்கின்றீர்கள்? இதனைத் தடுக்க நடவடிக்கைகள் எடுத்துள்ளீர்களா?**

இந்த சம்பவங்கள் வெகு குறைவாக ஒரு சில நேரங்களிலேயே இடம்பெறுகின்றது என்பதுதான் எம்மிடமுள்ள தகவல். மக்கள் தமக்கு அதிகமாகக் கிடைக்கின்ற பொருட்களை விற்றுத் தமக்குத் தேவையாக இருக்கின்ற பொருட்களை கொள்வனவு செய்கின்றார்கள் என்றே எங்களுக்கு சில சம்பவங்கள் தெரியப்படுத்தப்பட்டன. அதனால் இடம்பெயர்ந்தவர்கள் தமக்குக் கிடைக்கின்ற உணவுப் பொருட்களை விற்று உடுதுணி, மெழுகுவர்த்திகள் மற்றும் இதர உணவல்லாத பொருட்களை கொள்வனவு செய்வார்களாக இருக்கலாம். ஆனால், இவை உலக உணவுத் திட்டம் மூலம் வழங்கப்படுவதில்லை. எம்முடைய கள உத்தியோகத்தர்கள் முகாம்களில் கடமையில் ஈடுபட்டுள்ளார்கள். எனவே இவ்வாறான நடவடிக்கைகளை எம்மால் கவனிக்க முடியும். இதுபற்றி தொடர்புடைய அரச அதிகாரிகளிடம் கலந்துரையாடியிருக்கின்றோம். ஆனால் ஒரு சில சம்பவங்களே நடந்திருப்பதனால் இதனை ஒரு பெரிய பிரச்சினையாக நாம் கருதவில்லை. இடம்பெயர்ந்தவர்கள் மிக மிகப் பாதிக்கப்பட்டவர்கள். அவர்களுக்கு அடிப்படைத் தேவைக்குரிய பொருட்கள் மாத்திரமே வழங்கப்படுவதனால் ஏனையவற்றைப் பெற்றுக்கொள்ள உலக உணவுத் திட்டத்தினால் வழங்கப்படுகின்ற பொருட்களை விற்கின்றார்கள்.

**நிவாரணப் பொருட்கள் அரச வலையமைப்பு ஊடாக மேற்கொள்ளப்படுகின்றதா அல்லது இதற்கான விசேட ஏற்பாடுகள் உள்ளனவா?**

அரச தரப்பினரின் ஒத்துழைப்பு இல்லாமல் இடம்பெயந்தவர்களுக்கு உதவி வழங்குவது என்பது சாத்தியப்படாத விடயம். அதேவேளை ஏனைய உள்ளூர் சமூக கட்டமைப்புகளின் உதவியுடனும் இடம்பெயர்ந்தவர்களுக்கான உதவிகளை வழங்கி வருகின்றோம். எந்த வழியிலாவது உலர் உணவுப்பொருட்களை சிறப்பாகவும் உரிய முறையிலும் இடம்பெயர்ந்தவர்களுக்கு அனுப்புவதற்கான முயற்சிகளையே நாம் மேற்கொள்கின்றோம். இதற்காக அரச மற்றும் உள்ளூர் அமைப்புகளின் உதவிகளை நாடுகின்றோம்.

> ***உலக உணவுத் திட்டமானது அரசு மற்றும் தொடர்புபட்ட பங்குதாரர்களுடன் இணைந்து போதிய போசாக்கு உணவு இடம்பெயர்ந்த மக்களை சென்றடைவதை உறுதிப்படுத்தும் பணியில் ஈடுபட்டு வருகின்றது***

**மீளக்குடியேற்றப்படும் மக்களை உலர் உணவுப் பொருட்கள் சென்றடைகின்றதா என்பதை கண்காணிப்பதற்கு அங்கு செல்வதற்கான வசதி வாய்ப்புக்கள் உள்ளனவா ?**

மீளக் குடியேற்றப்படும் பகுதிகளில் எமது உத்தியோகத்தர்கள் உள்ளனர். அதனால் உலர் உணவுப் பொருட்களின் பங்கீடு குறித்து நாம் அவதானிக்க கூடியதாக உள்ளது. வன்னியில் குறிப்பிட்ட அளவிலான எமது உத்தியோகத்தர்கள் இந்த பணிகளில் ஈடுபடுகின்றனர். மிகவும் சவாலான மற்றும் மனிதாபிமான சூழ்நிலையில் இந்த பணிகளை முன்னெடுக்கின்றோம். இடம்பெயர்ந்து மக்கள் நலன்புரி நிலையங்களில் தங்கிய காலம் தொடங்கி தற்போது மீளக் குடியேற்றப்பட்டுக் கொண்டிருக்கும் போதும் உலக உணவுத்திட்டம் அவர்களுக்கான உதவிகளை வழங்குகின்றது. 40ஆயிரம் மெட்ரிக் தொன் உலர் உணவுப் பொருட்களை வழங்கியுள்ளோம். அரசினால் முன்னெடுக்கப்படுகின்ற மீளக் குடியேற்றப்படும் நடவடிக்கைகளுக்கும் ஏனைய மனிதாபிமான நடவடிக்கைகளுக்கும் இவ்வருடம் முதல் உதவி செய்ய எண்ணியுள்ளோம். இலங்கையின் சுபிட்சத்துக்கு எம்மாலான உதவிகளை வழங்குவோம்.

## கெடுபிடிகள் தளர்த்தப்பட்டதைத் தொடர்ந்து

# மும்முரமடைந்துள்ள வர்த்தக நடவடிக்கைகள்

*டி.சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

நாட்டில் கடந்த காலங்களில் ஏற்பட்ட யுத்த சூழ்நிலை காரணமாக வர்த்தக நடவடிக்கைகள் முடங்கிப் போயிருந்ததோடு, அது பொருளாதாரத்தில் பாரிய தாக்கத்தையும் ஏற்படுத்தியிருந்தது.

உற்பத்திகளை சுதந்திரமாக சந்தைக்கு கொண்டுசெல்ல முடியாதளவுக்கு சோதனைக் கெடுபிடிகள் அதிகரித்திருந்தது மட்டுமல்லாது, பொருட்களுக்கான போக்குவரத்திற்கும் பாரிய கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன.

குறிப்பாக வடக்கு, கிழக்கு மாகாணங்களின் வர்த்தக நடவடிக்கைகள் யுத்த காலப் பகுதியில் பெரும் நெருக்கடிக்குள்ளாகின. தற்போது யுத்தம் முடிவுக்கு வந்துள்ள நிலையில், சோதனைக் கெடுபிடிகள் மட்டுப்படுத்தப்பட்டுள்ளதோடு, போக்குவரத்துக்கு விதிக்கப்பட்டிருந்த தடைகள் பலவும் தளர்த்தப்பட்டுள்ளன.

**மன்னார் மாவட்டத்தைப் பொறுத்தவரையில் உயிலங்குளம் வீதி திறக்கப்படுமாயின், எமது வியாபார நடவடிக்கைகளை மேலும் சிறந்த முறையில் முன்னெடுத்துச் செல்ல முடியும்**

இதனால் வடக்கு, கிழக்கு மாகாணங்களின் வர்த்தக நடவடிக்கைகள் சுமுக நிலைமைக்குத் திரும்பி வருவதோடு, அதனால் வர்த்தகர்கள் மட்டுமல்லாது மக்களும் நன்மையடையக் கூடிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

குறிப்பாக, சோதனைக் கெடுபிடிகள் மட்டுப்படுத்தப்பட்டு போக்குவரத்துக்கான தடைகள் நீக்கப்பட்டுள்ளமையினால், மன்னார் மாவட்டத்தின் வர்த்தக நடவடிக்கையில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதாக அங்குள்ள வர்த்தகர்கள் சிலர் தெரிவித்தனர்.

### நம்பிக்கை

நாட்டின் தற்போதைய நிலைமையைப் பார்க்கும்போது எதிர்காலம் குறித்த நம்பிக்கை ஏற்பட்டுள்ளதாக மன்னார் மாவட்டத்தைச் சேர்ந்த வர்த்தகரான பாஸ்கரன் தெரிவித்தார்.

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், 'மன்னார் மாவட்டத்தில் முன்னரைவிட தற்போது வர்த்தக நடவடிக்கைகளை சிறந்த முறையில் முன்னெடுத்துச் செல்லக் கூடியதாக இருக்கிறது. யுத்தம் இடம் பெற்ற காலப்பகுதியில் போக்குவரத்துக்கான தடைகள் இருந்ததோடு, சோதனை கெடுபிடிகளும் அதிகரித்துக் காணப்பட்டடன. தற்போது வீதிகள் திறந்துவிடப்பட்டுள்ளது. சோதனைச்சாவடிகளும் குறைக்கப்பட்டுள்ளன. இதனால், வெளிமாவட்டங்களிலுள்ள பொருட்களை இங்கு கொண்டு வந்து விற்பனை செய்யவும் இங்குள்ளவற்றை வெளிமாவட்டங்களுக்கு விற்பனை செய்யவும் வாய்ப்பு ஏற்படுத்திக்கொடுக்கப்பட்டுள்ளது.

எதிர்காலத்தில் இதைவிட சிறந்த முறையில் வியாபார நடவடிக்கைகளை முன்னெடுக்க முடியும் என்ற நம்பிக்கை எமக்கு ஏற்பட்டுள்ளது. அதேவேளை, கெடுபிடிகளுக்கான தளர்வுகள் நிரந்தரமாக இருக்க வேண்டும் எனவும் நாம் எதிர்பார்க்கிறோம்' என்றார்.

### தற்போதுள்ள கெடுபிடிகள்

இதேவேளை, தற்போதுள்ள ஒரு சில கெடுபிடிகளும் நீக்கப்படுமாயின், வருமானத்தை அதிகரிக்கக் கூடிய வகையில் வியாபாரங்களை முன்னெடுத்துச் செல்ல முடியும் என மன்னாரைச் சேர்ந்த பழ வியாபாரியான தர்மராஜா தெரிவித்தார்.

**'மன்னார் மாவட்டத்தில் முன்னரைவிட தற்போது வர்த்தக நடவடிக்கைகளை சிறந்த முறையில் முன்னெடுத்துச் செல்லக் கூடியதாக இருக்கிறது'**

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், 'நாட்டின் தற்போதைய நிலைமை மகிழ்ச்சியளிக்கின்றது. ஆனாலும் மன்னார் மாவட்டத்தைப் பொறுத்தவரையில் உயிலங்குளம் வீதி திறக்கப்படுமாயின், எமது வியாபார நடவடிக்கைகளை மேலும் சிறந்த முறையில் முன்னெடுத்துச் செல்ல முடியும். இதன் மூலம் பொருட்களை அனுப்புவதற்கு மிகவும் உதவியாக இருக்கும்' என அவர் கூறினார்.

அத்தோடு தனது வியாபாரத்தில் முன்னரை விட பாரிய முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதாக மன்னாரைச் சேர்ந்த மற்றுமொரு வர்த்தகரான முருகன் தெரிவித்தார்.

இதுபற்றி அவர் கருத்துரைக்கையில், 'நாட்டில் முன்னரிருந்த சூழ்நிலை தற்போது இல்லை. எங்கு வேண்டுமென்றாலும் சென்று தடையின்றி பொருட்களை கொள்வனவு செய்ய முடியும் என்ற சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. இந்நிலைமையானது வர்த்தகத்தில் பாரிய முன்னேற்றத்தை ஏற்படுத்தியுள்ளது. எமது வியாபார நடவடிக்கைகளும் தங்குதடையின்றி முன்னெடுத்துச் செல்லப்படுகின்றது' என அவர் கூறினார்.

**'நாட்டில் முன்னரிருந்த சூழ்நிலை தற்போது இல்லை. எங்கு வேண்டுமென்றாலும் சென்று தடையின்றி பொருட்களை கொள்வனவு செய்ய முடியும் என்ற சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. இந்நிலைமையானது வர்த்தகத்தில் பாரிய முன்னேற்றத்தை ஏற்படுத்தியுள்ளது'**

கெடுபிடிகளின் தளர்வால் சூடுபிடித்துள்ள வர்த்தக நடவடிக்கைகள் நாட்டின் பொருளாதாரத்திற்குப் பாரிய பங்கு வகிக்கும் என மன்னார் மாவட்ட வர்த்தகர்கள் நம்புகின்றனர். இந்த நடைமுறைகள் தொடர்ந்தும் முன்னெடுக்கப்படுமாயின், தமக்கு பெரும் உதவியாக இருக்கும் எனவும் அவர்கள் வேண்டுகோள் விடுத்துள்ளனர்.



படங்கள்: ஏ.சொர்ணலிங்கம்

**மன்னார் அரிப்பு பகுதியில் மீனவர்கள் தாம் பிடித்த மீன்களை விற்பனைக்காகக் கொண்டு செல்வதை இங்கு காணலாம்**

INTERNEWS

மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.

USAID FROM THE AMERICAN PEOPLE




**குறள் 14**

ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

**விளக்கம்:**
**மழை என்னும் வருவாயின் வளம் குறைந்தால், பயிர் செய்யும் உழவரும் ஏரால் உழுதலைச் செய்யமாட்டார்கள்.**

## அழகின் ஆபத்து



ஒரு காட்டில் அழகிய கலைமான் ஒன்று இருந்தது. அதிக தாகம் எடுத்த காரணத்தினால் தாகத்தைத் தணித்துக் கொள்ள ஒரு நீர் நிலைக்குச் சென்றது. நீரை அருந்தும்போது நீரில் அதன் நிழல் தெரிந்தது. தன் கொம்புகள் நீண்டு அழகாகத் தெரிந்தது. ‘ஆகா, என் கொம்புகள்தான் எத்தனை அழகு! இது போன்று யார்க்கேனும் உண்டா?’ என்று பெருமிதமடைந்தது. அதேவேளை, ‘என்னுடைய குச்சிக் கால்கள் அல்லவா என் அழகைக் கெடுக்கிறது’ என்று தன் கால்களை இகழ்ந்தது. என் அழகுக்கேற்ற கால்கள் இல்லையே என்று தனக்குத்தானே கூறி வருந்தியது.

அதேவேளையில், சிங்கம் ஒன்று அங்கே வருவதைக் கண்டது. தன் உயிரைக் காத்துக்கொள்ள கலைமான் ஓடத்தொடங்கியது. சிங்கம் அதனைத் துரத்திக்கொண்டே வந்தது. கலைமான் தன் கால்களின் உதவியால் மிக வேகமாக ஓடியது. சிங்கமும் துரத்துவதை விடுவதாய் இல்லை. புல்வெளியில் சிங்கத்திடம் சிக்காமல் மிக வேகமாக ஓடியது. ஆனால், காட்டுப் பகுதிக்குள் நுழைந்ததும் மரம், செடி, கொடிகளுக்குள் அதன் கொம்புகள் சிக்கிக்கொள்ள அதனால் ஓட முடியாமல் போனது. ஒரு மரக்கிளைக்குள் அதன் கொம்பு வசமாக மாட்டிக் கொள்ள அதனால் மேற்கொண்டு ஓட முடியாமல் சிங்கத்திடம் அகப்பட்டுக் கொண்டது.

‘உயிரை இழக்கும் தருவாயில்தான் அதற்கு புத்தி வந்தது. வேகமாக ஓடி என்னைப் பகைவர்களிடமிருந்து காப்பாற்றும் எனது கால்களை இகழ்ந்தேன். எனது உயிருக்கே எமனாகிவிட்ட கொம்புகளின் அழகில் மயங்கி அதைப் புகழ்ந்தேன். நன்றி மறந்த எனக்கு இது சரியான தண்டனைதான்’ என்று கூறி வருந்தி உயிர் துறந்தது.

## பழமொழி பயில்வோம்!

கல்விக்கு இருவர், களவுக் கொருவர்.
கற்றது கைம்மண்ணளவு கல்லாதது உலகளவு.
கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு.
கற்கையில் கல்வி கசப்பு, கற்றபின் அதுவே இனிப்பு.
இளமையில் கல்வி சிலையில் எழுத்து.

### தெரிந்துகொள்வோம்

1. உலகின் மிக ஆழமான சமுத்திரம் எது? **பசுபிக் மகா சமுத்திரம்**
2. தனக்குக் கிடைத்த அமைதிக்கான நோபல் பரிசை ஆபிரிக்காவில் பசியால் வாடும் மக்களுக்கு வழங்கிய மனிதர் யார்? **தலாய் லாமா**
3. தத்துவத்தின் தந்தை என்று அழைக்கப்படுபவர் யார்? **சாக்ரடீஸ்**
4. ‘மாவோரி’ என்ற பழங்குடியினர் வாழும் நாடு எது? **நியூசிலாந்து**
5. சமையல் எரிவாயு சிலிண்டரில் அதிக அளவுள்ள வாயுவின் பெயர் என்ன? **மெதேன்**

## சிறார்களின் கைவண்ணத்தில்....


நா. ஜெனுசியா
தரம் - 7
இராமநாதன்
ந.பு.நி.


**கு. சரணியா**
வலயம் - 4
செட்டிக்குளம் ந.பு.நி.


**ந. டக்ளஸ்**
தரம் - 10, வீ. இல. 391, வலயம் - 7, இராமநாதன் ந.பு.நி.


**யோ. சுகந்தன்**
தரம் - 11, வீ. இல. 123, இராமநாதன் ந.பு.நி.



**ப. பிரதிஸ்குமார்**
தரம் - 11
வீ. இல. 6150
அருணாச்சலம் ந.பு.நி.

**ச. கலைமகள்**
வீ. இல. 2411
வலயம் - 8
அருணாச்சலம்
ந.பு.நி.




**சு. கேமலதா**
வலயம் - 22
இராமநாதன் ந.பு.நி.
செட்டிக்குளம்.


**ஜெ. ஜெனோஜி**
தரம் - 10, வீ. இல. 5506, அருணாச்சலம் ந.பு.நி.


**பா. சுவேந்திரன்**
தரம் - 8
வீ. இல. 93
வலயம் - 17
இராமநாதன்
ந.பு.நி.


**கு. உபாசினி**
வலயம் - 4
செட்டிக்குளம்
ந.பு.நி.

சிங்களம் සිංහල Sinhala | Let's COMMUNICATE கற்போம் Lesson 10

பாடம் 10

## உடல் உறுப்புக்கள் Parts of body

| | | | | |
|---|---|---|---|---|
| නියපොතු | මැණික් කටුව | වැළමිට | ඉඟ | දිව |
| **நியபொத்த** | **மெனிக் கடுவ** | **வெலவிட** | **இன** | **டிவ** |
| நகம் | மணிக்கட்டு | முழங்கை | இடுப்பு | நாக்கு |
| Nail | Wrist | Elbow | Hip | Toung |

# யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட பெண்களுக்கான வாழ்வாதார உதவிகள்

*சு. சத்தியா*

வடக்குவாழ் மக்கள் காலங்காலமாக பல பிரச்சினைகளுக்கும் சவால்களுக்கும் முகங்கொடுக்கவேண்டிய இக்கட்டான நிலையில் வாழ்ந்து வருகின்றனர்.

கடந்த வருடத்தில் வடக்கிலிருந்து இடம்பெயர்ந்த மக்களின் இழப்புக்களோ எண்ணிலடங்காதவை. இழப்புக்கள் அனைத்தையும் தரம்பிரித்துப் பார்க்க முடியாவிட்டாலும் யுத்தத்தினால் சிலர் வாழ்நாள் முழுதும் வேதனையுடன் வாழவேண்டிய நிலையில் உள்ளனர்.

**சவால்கள்**

அவர்களில் முக்கியமானவர்கள் தற்போது நலன்புரி நிலையங்களிலும் மீள்குடியேற்றப் பிரதேசங்களிலும் வசித்து வருகின்ற கணவனை இழந்த மற்றும் பிரிந்த பெண்கள். இப்பெண்கள் தமது பிள்ளைகளோடு மிகவும் கஷ்டமான நிலையில் வாழ்ந்து வருவதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

வவுனியா தவசிக்குளத்தில் வசிக்கும் குலேந்திரன் சசிகலா புங்குடுதீவை சொந்த இடமாகக்கொண்டவர். வவுனியா நலன்புரி நிலையத்திலிருந்து விடுவிக்கப்பட்டு தனக்கு அறிந்த ஒருவர் வீட்டில் தற்போது வசித்து வருகின்றார். இவருடைய கணவர் நான்கு மாதங்களுக்கு முன்னர் வவுனியா நலன்புரி நிலையத்திலிருக்கும்போது நோய்வாய்ப்பட்டு இறந்துள்ளார்.

குலேந்திரன் சசிகலாவுக்கு நான்கு பிள்ளைகள். இவருடைய கடைசிக் குழந்தை பிறந்து ஒரு மாதமே ஆகின்றது. தற்போது எனக்கு நிவாரணங்கள் எதுவும் கிடைப்பதில்லை. நிவாரணம் பெறுவதற்காக பதிவு செய்திருக்கின்றேன். பிள்ளைகளைப் பாடசாலைக்கு அனுப்புவது

**வவுனியாவில் பால் நிலை தொடர்பாகத் தமது திட்டங்களை முன்னெடுத்துச் செல்கின்ற அரசசார்பற்ற நிறுவனங்கள் யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு புதிய செயற்றிட்டங்களை அமுல்படுத்துவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றன**

கூட சிரமமாக உள்ளது. நிறுவனங்கள் மூலம் ஏதாவது தையல் இயந்திரம் ஒன்றைப் பெற்றுக்கொடுத்தால் அதைக் கொண்டு ஓரளவு வருமானத்தை ஈட்டிக் கொள்ள முடியும் என மிகவும் மனக்கவலையுடன் அவர் தெரிவித்தார்.



இடம்பெயர்வின்போது சிலரது கணவன்மார் உயிரிழந்துள்ளதுடன், காணாமல் போன சம்பவங்களும் இடம்பெற்றுள்ளன. இவ்வாறான பெண்களின் வாழ்க்கை தற்போது தனித்து விடப்பட்ட நிலையில் காணப்படுகின்றமையால் இவர்களுக்குத் தேவையான வாழ்வாதார உதவிகளை வழங்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டுள்ளது.

அந்தவகையில், வவுனியாவில் பால் நிலை தொடர்பாகத் தமது திட்டங்களை முன்னெடுத்துச் செல்கின்ற அரசசார்பற்ற நிறுவனங்கள் யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு புதிய செயற்றிட்டங்களை அமுல்படுத்துவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றன.

**உதவியும் ஆலோசனையும்**

வவுனியா சகவாழ்வு மன்றமானது யுத்தத்தினால் விதவைகளாக்கப்பட்ட பெண்களுக்கு வாழ்வாதார உதவிகளையும் அவர்களுடைய பாதுகாப்பைத் தாமாக உறுதிப்படுத்திக்கொள்வதற்கான ஆலோசனைகளையும் வழிகாட்டல்களையும் வழங்குவதற்கு முன்வந்துள்ளது. இது தொடர்பாக திட்ட அறிக்கைகள் தயாரிக்கப்பட்டுள்ளதுடன், மிக விரைவில் அமுல்படுத்துவதற்கான நடவடிக்கைகளும் இந்நிறுவனத்தினால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

**சுயதொழில் வாய்ப்பு**

அண்மையில் இடம்பெற்ற மீள்குடியேற்ற நடவடிக்கைகளின்போது கணவனை இழந்த பெண்களின் முக்கியமான பிரச்சினைகளைத் தாம் இனங்கண்டதாகவும் அதற்கமைய இத்திட்டம் ஆரம்பிக்கப்படவுள்ளதாகவும் சகவாழ்வு மன்றத்தின் திட்ட இணைப்பாளர் ஜே. பிரேங்லி சொய்சா குறிப்பிட்டார். குறிப்பாகப் பாதிக்கப்பட்ட பெண்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்தக்கூடிய பயிற்சிப் பட்டறைகள் ஊடாக சுயதொழில் வாய்ப்புக்களை பெற்றுக்கொடுப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படும் எனவும் அவர் தெரிவித்தார்.

சுயதொழில் எனும்போது குழுமுறையிலான கால்நடைவளர்ப்பு, சிறு வியாபாரங்கள், தையல் தொழில் போன்றவற்றுக்கான உதவிகள் வழங்கப்படவுள்ளன. தற்போது நலன்புரி நிலையங்களில் வசிப்பவர்கள் இத்திட்டத்திற்குள் உள்வாங்கப்படுவார்கள் எனவும் அவர்கள் தமது சொந்த இடங்களில் மீள்குடியேற்றப்படும் பட்சத்தில் இவ்வுதவிகள் வழங்கப்படுமெனவும் ஜே.பிரேங்லி சொய்சா மேலும் தெரிவித்தார்.

**பாதிக்கப்பட்ட பெண்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்தக்கூடிய பயிற்சிப் பட்டறைகள் ஊடாக சுயதொழில் வாய்ப்புக்களை பெற்றுக்கொடுப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படும்**

இதேவேளை, வவுனியா அபிவிருத்தி நிலையமானது கிளிநொச்சி, முல்லைத்தீவு, மன்னார் மாவட்டங்களிலுள்ள மீள்குடியேற்றக் கிராமங்களில் வறுமைக்கோட்டில் வாழும் மற்றும் கணவனை இழந்த பெண்களுக்கான திட்டங்களை முன்னெடுக்கவுள்ளது. இதற்கான அனுமதியையும் இந்நிறுவனம் அரசிடமிருந்து பெற்றுக்கொண்டுள்ளது. இவர்களை இலக்காகக் கொண்டு தமது நடவடிக்கைகளை முன்னெடுப்பதற்கான காரணம் இவர்கள் யுத்தத்தினால் அதிகமாகப் பாதிக்கப்பட்டுள்ளமையும் வருமானத்தைப் பெற்றுக்கொள்ளக்கூடிய வழிவகைகள் இன்றி இருப்பதுவும் தான் என்று பெண்கள் அபிவிருத்தி நிறுவனத்தின் நிர்வாக உத்தியோகத்தராகவும் திட்ட உத்தியோகத்தராகவும் கடமையாற்றும் விஸ்வலிங்கம் சுலோஜினி தெரிவித்தார்.

மேலும் இத்திட்டத்தின் ஊடாகத் தமது மூன்று உளவளத் துணையாளர்களைக் கொண்டு ஆற்றுப்படுத்தல் தேவைப்படுகின்றவர்களுக்கு உளவளத்துணை செயற்பாடுகள் மேற்கொள்ளப்படவிருப்பதாகவும் இவர்களுக்கு சட்ட ஆலோசனைகளை வழங்குவதற்கும் தாம் தயாராக இருப்பதாகவும் விஸ்வலிங்கம் சுலோஜினி கூறினார்.

## உங்களிடமிருந்து...

### ஊருக்குப் போயிருந்தேன்

கனநாள் கழித்துக் கிடைத்த
விடுமுறையொன்றில்
ஊருக்குப் போயிருந்தேன்!
அங்கு எதுவுமே எனக்கு
முன்பு சந்தோசமளித்தது போன்று
இருக்கவில்லை!
பிள்ளையாரடிச் சந்தியும்
புளியடிக் கோயிலும்
வெறிச்சோடிக்கிடப்பதைக் கண்ட எனக்கு
யுத்த கால இருட்டுக்குள்
எங்கள் ஊரார் வாழ்வு
கறுத்துக் கிடப்பது தெரிந்தது!
ஆசையோடு நான் சந்திக்கும்
முந்தைய நாளைய என்
பாடசாலை சிநேகிதன்
நீயில்லாத நாளைவெளியில்
மரக்காலொன்றும்
ஊன்றுகோலொன்றும்
பரிசாகக் கிட்டியதாகச் சொல்லி
என்னைக் கட்டியணைத்தான்!

**ச. டினேசன்**
வீ. இல. 895
வலயம் - 11
இராமநாதன் ந.பு.நி.

### மூன்றெழுத்து

அன்னை என்னும்
மூன்றெழுத்தில் பிறந்தோம்
அன்பு என்னும்
மூன்றெழுத்தில் வளர்ந்தோம்
பள்ளி என்னும்
மூன்றெழுத்தில் சேர்ந்தோம்
கல்வி என்னும்
மூன்றெழுத்தில் கற்றோம்
போட்டி என்னும்
மூன்றெழுத்தை எதிர்கொண்டோம்
வெற்றி என்னும்
மூன்றெழுத்தை அடைந்து
சாதனை என்னும்
மூன்றெழுத்தைச் சந்தித்தோம்!

**மதியாபரணம் ஜெசிந்தா**
வீ. இல. 80, வலயம் - 39
இராமநாதன் ந.பு.நி.

### என்ன சொல்லி போற்றுவது?

முன்னூறு நாட்கள் என்னை
முன்நாள் சுமந்தவள் நீ
துன்பத்திலும் இன்பமாய் என்னை
தூக்கி வளர்த்தவள் நீ
சோகம் வரும் வேளையில் என்னை
சொர்க்கத்தில் வைத்தவள் நீ
இத்தனையும் செய்தாய் அம்மா
உன்னை என்ன சொல்லி போற்றுவேனோ?

**வி. திவ்வியா**
வீ. இல. 107
வலயம் - 22
இராமநாதன் ந.பு.நி.

இப்பத்திரிகை எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் (சிலோன்) லிமிட்டெட்டாரால் கொழும்பு - 14, கிராண்ட்பாஸ் வீதி, 185ஆம் இலக்கத்தில் 2010ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் 07ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை அச்சிட்டு வெளியிடப்பட்டது.